قصة نوح عليه السلام للأطفال (لغة تاميل)

# சிறுவர் சிறுமிருக்கு நூச் நபி வரலாறு

K. J. மஸ்தான் அலீ பாகவி, உமரி

கூலீம்: பிள்ளைகளே! நான் இன்று நூஹ் நபி கதை சொல்லப் போகிறேன்.

- பிள்ளைகள் அனைவரும் ஆர்வத்துடனும் மகிழ்ச்சியுடனும் கதை கேட்கத் தயார் ஆயினர்.

சலீம்: நூச் நபி பற்றி அறியாதவர்கள் யாரும் இருக்க முடியாது. ஆதம் நபியைப்போல் அனைவராலும் அறியப்பட்டவர்தாம் நூச் நபியும்!

உலகத்தில் முன்னொரு காலத்தில் மிகப் பயங்கரமான வெள்ளப்பிரளயம் ஏற்பட்டது. அதனை நீங்கள் எல்லோரும் கேள்விப்பட்டி ருக்கலாம். பேரழிவையும் பெரும் நாஷத்தையும் ஏற்படுத்திய அந்தப் பயங்கரமான நிகழ்ச்சி நூஹ் நபியின் காலத்தில் நடந்ததுதான்.

ஜைனப் : என்கு நல்ல ஞாபகம் இருக்கிறது., சிறு வயதில் என் பாட்டிமார்கள் நூஹ் நபி காலத்தில் ஏற்பட்ட வெள்ளப்பிரளயம் பற்றி கதை சொல்லியதை நான் கேட்டிருக்கிறேன்,

கமால்: நூஹ் நபி அவர்கள், ஆதம் நபியின் புதல்வர்களில் ஒருவரா?

சலீம்: இல்லை., ஆதம் நபியின் வழித்தோன்றல்களில் பற்பல தலைமுறைகளுக்குப் பின்னர்தான் நூஹ் நபி தோன்றினார்கள்.

பாஷா: அல்லாஹ், நூஹ் நபியை தூதராக அனுப்புவதற்கு என்ன அவசியம் ஏற்பட்டது? ஆதம் நபியின் போதனைகளை அவ்வளவு சீக்கிரமாகவா மக்கள் மறந்தார்கள்?

சலீம்: நல்லதொரு கேள்வி கேட்டான், பாஷா. அவனுக்கு என் பாராட்டுகள். இந்தக் கேள்விக்கான விடையில் இருந்தே நூஹ் நபியின் கதையை உங்களுக்கு நான் விவரிக்கிறேன். எல்லோரும் அமைதியாகக் கதையைக் கேளுங்கள்.

ஆதம் நபியின் போதனைகளைப் பின்பற்றி வந்த மக்கள் மத்தியில் ஐந்து பெரியார்கள் வாழ்ந்தார்கள். அவர்களின் இறைவழிபாடும் பயபக்தியும் தூயவாழ்வும் எல்லோரையும் கவர்ந்தன. அவர்கள் மிகமிக நல்லவர் களாகவும் வல்லவர்களாகவும் திகழ்ந்தார்கள். அதனால் அவர்களின் மதிப்பும் செல்வாக்கும் நாளுக்குநாள் உயர்ந்தன. அந்தப் பெரியார்கள் மீது மக்கள் அனைவரும் அதிக அன்பு செலுத்தினார்கள்.

வத்து, சுவா, யஃகூஸ், யஊக், நஸ்ர் ஆகியவைதான் அப்பெரியார் களின் அழகுப் பெயர்கள்.

காலங்கள் கடந்தன. அந்த ஐந்து பெரியார்களுக்கு மரணம் வந்தது. அப்பொழுது அவர்கள் மீது அன்பு வைத்திருந்த மக்களுக்குப் பெரும் அதிர்ச்சி! கடுமையான துக்கமும் துயரமும் அவர்கள் அனை வரையும் ஆட்கொண்டது!

அவர்கள் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டார்கள்: கண்மூடி - மண் மூடிப்போன நம் பெரியார்களை நாமும் மறந்து விடுவதா? அது கூடாது. என்றென்றும் அவர்களின் நினைவு நம் நெஞ்சங்களில் நிலைத் திருக்க வேண்டும். அதற்கு நாம் என்ன செய்ய வேண்டும் என்கிற ரீதியில் அந்த மக்கள் சிந்தித்தார்கள்.

அத்தகைய தவறானதொரு சிந்தனையின் விளைவாகவே அந்தப் பெரியார்களுக்குச் உருவச் சிலைகள் உருவாக்கப்பட்டன. ஆம், அப்பெரியார்களை நினைவுகூர வேண்டும் என்பதற்காக அவர்களின் உருவங் களுக்குச் சிலைகள் வடிக்கப்பட்டன!

மிகமிக அழகிய தோற்றத்திலும் அளவான வடிவத்திலும் உருவாக்கப்பட்ட அந்தச் சின்னச் சின்னச் சிலை களைப் பார்த்துப் பார்த்து மக்கள் எல்லாம் மன ஆறுதல் அடைந்தனர். ஆனந்தம் கொண்டனர்.

இந்த நிலை பலகாலம் நீடித்தது. பெரியார்களுக்குச் சிலைகள் செய்த அனைத்து மக்களையும் மரணம் வந்து அழைத்துக் கொண்டது. அவர்களின் சந்ததிகள் வந்தார்கள். அதற்கும் பிறகு மூன்றாவது - நான்காவது தலை முறையினர் தலையெடுத்தார்கள்!

பிற்காலத்தில் தோன்றிய அந்த மக்கள், தங்கள் கண்ணெதிரே நின்று கொண்டிருந்த கற்சிலைகளைக் கண்டார்கள். இந்தச் சிலைகளை எதற்காக நம் முன்னோர்கள் உருவாக்கினார்கள்? இவற்றிற்கும் நமக்கும்

என்ன தொடர்பு? நாம் என்ன செய்ய வேண்டும்? - எதுவும் அவர்களுக்குப் புரியவில்லை. எதையும் அறியா தவர்களாய் அவர்கள் இருந்தார்கள்.

மனிதனின் மிகப் பெரும் விரோதியாகிய இப்லீஸ், மக்களின் இந்த அறியாமையை நன்கு பயன்படுத்திக் கொண்டான். ஏக இறைவனாகிய அல்லாஹ்வை வணங்கிவழிபட விடாமல் மக்களைத் திசைதிருப்புவதற்கான திட்டம் தீட்டினான்.

இப்லீஸ் மக்களிடம் வந்தான்: இந்தச் சிலைகள்தான் கடவுள்கள். இவற்றையே வணங்க வேண்டும். நோய்நொடிகள் குணம் அடைந்து உடல் நலம் பெறவும் துன்பங்கள் நீங்கி இன்பங்கள் சூழ்ந்திடவும் இந்தச் சிலைகளையே நாடி வர வேண்டும்.,இவற்றிடமே பிரார்த்தனை செஷ்ய்ய வேண்டும் என்ற நச்சுக் கருத்துகளை நயமாக எடுத்துக்ஷ் செஷான்னான். அறியாமையில் மூழ்கிக் கிடந்த அந்தமக்களும் அவற்றை அப்படியே நம்பி னார்கள்!

இவ்வாறாக அந்த மக்களிடம் இருந்து மெல்லமெல்ல இறை வழிபாடு விடைபெற்றது., சிலை வழியாடு பரவியது!

ஆம், அன்றைய மக்களின் வாழ்வில் சத்தியம் நீர்த்துப்போனது. அசத்தியமே எல்லா விதமான பொய் அலங்காரங்களுடனும் பவனி வந்தது!

தெளிந்த நீரோடை போல் அமைதியாகச் சென்று கொண்டிருந்த மனித வாழ்க்கையைத் தீராத சிக்கல்கள் சீக்கிரமாக வந்து சூழ்ந்து கொண்டன!

இப்படிப்பட்ட காலகட்டத்தில்தான் மனிதர்களுக்கு நேர்வழி காட்டு வதற்காக நூஹ் நபியை அல்லாஹ் அனுப்பிவைத்தான்.

## 2 - நற்குணங்கள்

ஜைனப்: எத்தகைய உயர்த் தகுதிகள், உன்னதப் பண்புகளின் அடிப்படையில் நூஹ் நபியை அல்லாச் தன்னுடைய தூதராகத் தேர்வு செய்தான் என்பதையும் சுருக்கமாகச் சொல்லுங்கள். அப்பொழுதுதான் நபிமார்களைப் பின்பற்றி நாமும் நற்குணங்களுடன் வாழ வேண்டும்., நற்பண்பாளர்களாகத் திகழ வேண்டும் என்கிற எண்ணம் நம் பிள்ளைகளுக்கும் வரும்.

சலீம்: ஆம், சொல்கிறேன்., கேளுங்கள்! நூஹ் அவர்கள் மாமனிதராக - மகத்தான குணவொழுக்கம் கொண்டவராக இருந்தார்கள். ஒரு மன்னராகவோ சமுதாயத் தலைவராகவோ செல்வச் சீமானாகவோ அவர்கள் இருக்கவில்லை.

ஒரு மனிதனின் மகத்துவத்திற்கும் உயர் அந்தஸ்துக்கும் ஆட்சி அதிகாரமோ தலைமைப் பதவியோ செஷல்வமோ அளவுகோல் அல்ல. உளத் தூய்மையும் ஒழுக்கமும் சீரிய சிந்தனையும் சிறந்த அறிவாற்றலும் தான் அளவுகோல்.

நூஹ் அவர்களின் உயர் அந்தஸ்துக்கு இன்னொரு காரணம் என்னவெனில், அவர்கள் எல்லா நிலை களிலும் ஏக இறைவனாகிய அல்லாச்வை நினைவு கூர்வபவர்களாய் இருந்தார்கள்.

உணவு - பானம் உட்கொண்டாலும் ஆடைகள் அணிந்தாலும் வீட்டிலிருந்து வெளியே சென்றாலும் வீட்டில் நுழைந்தாலும் தூங்கச் சென்றாலும் அதிலிருந்து விழித்தாலும் - எல்லா நிலைகளிலும் ஏக இறைவனாகிய அல்லாஹ்வை திக்ர் செய்து - துதித்துக் கொண்டிருப்பார்கள்.

அல்லாச்வுக்கு நன்றி செலுத்துவதை அவர்கள் மறப்பதே இல்லை. அவன் முன்னர் அருளிய அருட்கொடை களை மட்டுமல்ல., அவ்வப்பொழுது அவன் அருளிக்கொண்டிருக்கும் பேருபகாரங்களை எல்லாம் நினைத்துப் பார்த்து மீண்டும் மீண்டும் அவனுக்கு நன்றி செலுத்திக் கொண்டிருப்பார்கள் நூஹ் நபியவர்கள்.

திருக்குர்ஆன் நூஹ் நபியைப் புகழ்வதைக் கேளுங்கள்: நீங்கள், நூஹு டன் கப்பலில் நாம் ஏற்றியிருந்த மக்களின் வழித்தோன்றல்கள் ஆவீர். திண்ணமாக நூஹ் நன்றியுள்ள ஓர் அடியாராகத் திகழ்ந்தார்" திருக் குர்ஆன் (17 : 4)

- பிள்ளைகளே, நாமும் இவ்வாறே வாழ வேண்டும். அல்லாஹ்வை நாம் மறந்துவிடாமல் எப்பொழுதும் அவனை நினைவு கூர்ந்திட வேண்டும். அவனுக்கு நன்றி செலுத்திட வேண்டும்.

## 3 - ஏகத்துவப் பிரச்சாரம்

ஓரிறைக் கொள்கையைப் பிரச்சாரம் செய்யுமாறு இறைவன் இட்ட கட்டளையை ஏற்ற நூஹ் நபியவர்கள் மக்களிடம் வந்து பிரச்சாரத்தைத் தொடங்கினார்கள். திருக் குர்ஆன் கூறுகிறது:

திண்ணமாக நாம் நூஹை அவருடைய சமூகத்தாரிடம் அனுப்பி வைத்தோம். அவர் கூறினார்: என் சமுதாய மக்களே, அல்லாச்வை வணங்குங்கள். அவனைத் தவிர வேறு இறைவன் உங்ளுக்கு இல்லை. மகத்தான (அந்த மறுமை) நாளின் வேதனை உங்கள் மீது வந்து விடுமோ என்று நான் அஞ்சுகிறேன்" (7 : 59)

- ஆம், நூஹ் நபியவர்கள் ஏகத்துவக் கொள்கை குறித்துத் தெளிவானதொரு விளக்கம் அளித்தார்கள்:

மக்களே, நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். இவ்வுலகில் இருப்பது ஒரே இறைவன்தான். அவனே இந்த அகிலம் முழுவதையும் படைத்தான். அவனைத் தவிர வேறு கடவுள் இல்லை.

ஆனால் இப்லீஸ் வந்துதான் உங்களை ஏமாற்றியுள்ளான். அது நீண்ட காலமாக நடந்துள்ளது. இந்தச் சிலைகள்தான் கடவுள்கள் என்று சொல்லி உங்களை வழிகெடுத்துள்ளான். இவற்றையே வணங்க வேண்டும் என்று உங்களை சைத்தான் திசைமாறச் செய்திருக்கிறான். சைத்தானுடைய இந்த மோசடியைத் தடுத்து நிறுத்துவதற்கான நேரம் வந்து விட்டது!

- அத்துடன் ஏக இறைவனாகிய அல்லாஹ், மனிதனுக்கு அளித்த கண்ணியத்தையும் எடுத்துரைத்தார்கள் நூஹ் நபியவர்கள்:

மனிதனை எத்துணை அழகிய வடிவத்தில் இறைவன் படைத்திருக்கிறான் என்பதைப் பாருங்கள்! மனிதன் உயிர் வாழ்வதற்குத் தேவையான உணவையும் இதர வாழ்க்கைச் சாதனங்களையும் வழங்கியவனும் அந்த இறைவன்தான். மட்டுமல்ல சீராகச் சிந்திப்பதங்குப் பகுத்தறிவையும் வழங்கியுள்ளான் அல்லவா? அந்தப் பகுத்தறிவைப் பயன்படுத்திச் சிந்தித்துப் பாருங்கள். ஏக இறைவனாகிய அல்லாஹ்வை விடுத்து இந்தப் பெரியார்களின் சிலைகளை வணங்குவது அநீதியாகும். பகுத்தறிவையே களங்கப்படுத்தும் காரியமாகும்.

-நூஹ் நபியின் நாவிலிருந்து அருவிபோல் கொட்டிய இந்த அறிவுரைகளை அந்த மக்கள் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந் தார்கள்தான். ஆனாலும் எந்தப் பயனும் இல்லை.

மாறாக, நீண்ட நித்திரையில் இருந்த அந்த மக்களைத் திடீரெனப் பிடித்து உலுக்குவது போல் இருந்தது நூச் நபியின் வார்த்தைகள்! அதனால் அவர்கள் சிந்திப்பதற்குப் பதிலாகக் கடும் சினம்தான் கொண்டார்கள்!

பாசா: என்ன, நூஹ் நபி மீது சினம் கொண்டார்களா? ஆச்சரியமாக இருக்கிறதே! அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தார்கள் என்றதும் திருந்தியிருப்பார்கள்., நேர்வழி திரும்பியிருப்பார்கள் என்றல்லவா நினைத்தேன்!

சலீம்: ஆம், சினம்தான் கொண்டார்கள். அதற்கு ஓர் எடுத்துக்காட்டு தந்தால் தெளிவாகப் புரியும்., உங்களுக்கு! நீங்கள் ஒரு வீதி வழியாக நடந்து செல்கிறீர்கள். அங்கே நெடிதுயர்ந்த சுவர் ஒன்றுள்ளது. அதன் அடியில் ஒரு மனிதன் நன்றாகத் தூங்கிக் கொண்டிருக்கிறான். ஆனால் அந்தச்சுவர் மெது மெது வாகக் கீழே சாய்கிறது!

இப்பொழுது நீங்கள் என்ன செய்வீர்கள்? உடனே உரக்க சப்தமிட்டுக்கொண்டு விரைந்து சென்று அந்த மனிதனை உசுப்புவீர்கள்., பிடித்து இழுப்பீர்கள்! அப்படித்தானே! ஆனால் திடுமெனக் கண்விழிக்கும் அந்த மனிதன் உண்மைநிலை அறியாமல் உங்கள் மீது கடும் கோபம் கொள்ளலாம், இல்லையா? முற்றிலும் இது போலவே நூஹ் நபியின் நிலையும் இருந்தது!

## 4 - நபியும் ஒரு மனிதரே!

ஆமினாவும் ஃபாத்திமாவும் கலக்கத்துடன் கேட்டார்கள்: அப்பா, பிறகு அந்த மக்கள் என்ன செய்தார்கள், நூஹ் நபியை! அடித்துத் துன்புறுத்தினார்களா?

சலீம்: ஆம், சொல்கிறேன், கேளுங்கள்! நூஹ் நபியவர்கள் ஏகத்துவப் பிரச்சாரத்தை தீவிரமாக மேற் கொண்டதும் அன்றைய உலகில் இருந்த தீய சக்திகள் அனைத்தும் மிரண்டன., கலக்கம் அடைந்திருந்தன. அன்பும் மக்கள் நலன் குறித்த அக்கரையும் இழையோடியிருந்த நூஹ் நபியின் வார்த்தைகளைக் கேட்டு அதிகார பீடம் அச்சத்தால் ஆட்டம் கண்டது! ஆம், நூசை நபியென ஏற்றுக் கொண்டால் தங்களின் அதிகாரமும் சுகவாழ்வும் போய்விடுமோ என்று அவர்கள் அஞ்சினார்கள்!

நூஹ் நபி விடுத்த ஏகத்துவ அழைப்பு ஏழை எளியோர்கள், வறியோர்கள் மற்றும் பலவீனமான மக்கள் ஆகியோரின் இதயத்தில் இடம் பிடித்தது. அவர்களின் கச்டங்களையும் துன்பங்களையும் நீக்கி மனத்திற்கு ஆறுதல் அளிக்கும் அருமருந்தாய் அமைந்தது.

ஆனால் செல்வச் சீமான்களும் மக்களிடையே செல்வாக்கு பெற்றி ருந்த சமுதாயப் பிரமுகர்களும் பலசாலிகளும் என்ன செய்தார்கள் தெரியுமா? நூஹ் நபி விடுத்த ஏகத்துவ அழைப்பைச் சந்தேகக் கண் கொண்டு பார்த்தனர்! அன்றைய சமூகத்தைத் தமது விருப்பப்படி ஆட்டிப்படைத்து நன்கு அனுபவித்து வந்த

இந்தப் பிரிவினர் தங்களுடைய சமூக அந்தஸ்தும் செல்வாக்கும் நீடிக்க வேண்டுமெனில் நூஹ் நபியை எதிர்த்தே ஆக வேண்டும் என்ற முடிக்கு வந்தார்கள்!

முதலில் நூஹ் நம்மைப்போன்ற ஒரு மனிதர்தானே என்று கூறி மக்களைச் சந்தேகத்தில் உழல வைத்தனர். குர்ஆனில் வருகிறது:

அவருடைய அறிவுரையை ஏற்க மறுத்த அவருடைய சமுதாயத் தலைவர்கள் கூறினார்கள்: எங்களுடைய பார்வையில் நீர் எங்களைப் போன்ற மனிதரே அன்றி வேறல்லர்" (11 : 27)

- ஆனால் நூஹ் நபியும்கூட தம்மை ஒரு மனிதர் என்று தான் கூறியிருந்தார்கள். அதற்கு மேல் எதுவும் அவர்கள் கூறவில்லை ...

ஜைனப்: அநாச்சார வாதிகள் நம் மீது இதனை குறையாகச் சொல்கிறார்களே! அதாவது, நாமெல்லாம் நபிமார்களை மனிதர்கள் என்று சொல்கிறோம்., அப்படிச் சொல்வதால் அவர்களின் அந்தஸ்தைக் குறைத்து மதிப்பிடுகிறோம் என்கிறார்களே! ஆனால் நூஹ் நபியும்கூட தம்மை ஒருமனிதர் என்றுதான் சொல்லி இருக்கிறார்கள் என்கிறீர்களே?

சலீம்: ஆம், நூஹ் நபி தாமும் ஒரு மனிதரே என்றுதான் சொன்னார்கள்! உண்மைதானே. மனிதர்களில் ஒருவரைத்தான் நபியாக - ரசூலாக இவ்வுலகத்திற்கு அல்லாஹ் அனுப்பி வைக்கிறான். ஏனெனில் இவ்வுலகில் மனிதர்கள்தான் வசிக்கிறார்கள். மாறாக இங்கு மலக்குகள் வசித்தார்கள் எனில் மலக்கு (வானவர்) ஒருவரைத் தூதராக அல்லாச் அனுப்பியிருப்பான்!

அன்றைய நிராகரிப்பாளர்கள், நபிமார்களைப் பார்த்து -நீங்கள் மனிதர்கள்தானே., எங்களைப் போன்றவர்கள்தானே என்று கூறி சத்தியத்தை ஏற்காதிருப்பதற்கு ஒருநொண்டிக் காரணத்தை முன்வைத்தார்கள்!

அந்த நிராகரிப்பாளர்களைப் போன்று சத்தியத்தை ஏற்காதிருப்ப தற்காகத்தான் இன்றைய அனாச்சார வாதிகள் - நபிமாார்கள் மனிதர்கள் அல்லர் என்று திரிபுவாதம் பேசுகிறார்கள்!

சரியாப் புரிந்து கொள்ள வேண்டும்.

- நீங்கள் எங்களைப் போன்ற மனிதர்கள்தான்., அதனால் உங்களை நாங்கள் ஏற்றுக்கொள்ள முடியாது (நபிமார்களைப் பார்த்து அன்றைய நிராகரிப்பாளர்கள் சொன்னது இது)
- நபிமார்கள் நம்மைப்போல் மனிதர்கள் அல்லர். மனிதத் தன்மையை விட்டும் மேம்பட்டவர்கள். எனவே அவர்களிடம் நேரடியாகப் பிரார்த்தனை செய்வதும் அதற்காகச் செய்யும் இந்தச் சடங்குகளும் தவறு அல்ல. (இன்றைய அனாச்சார வாதிகள் நபிமார்கள் பற்றிச் சொல்லும் வார்த்தை இது)

இரு வார்த்தைகளுக்கும் பின்னால் ஒளிந்திருக்கும் தீய நோக்கம் புரிகிறதா? நபிமார்களின் அறிவுரைகளைப் புறக்கணிக்க வேண்டும் என்பதுதான் அது! அதற்காகவே இப்படிஇப்படியெல்லாம் திரிபுவாதம் பேசுகிறார்கள், இந்தத் தீயவர்கள்!

சலீம் கதையைத் தொடர்ந்தார்! நூஹ் நபி குறித்து அவர் நம்மைப் போன்ற ஒரு மனிதர்தான்., எனவே அவரை இறைத்தூதராக ஏற்க முடியாது என்று கூறிய நிராகரிப்பாளர்கள் பிறகு வேறோர் ஆட்சேபனையை எழுப்பினார்கள், அது என்ன?

## 5 - எளியோரைக் தாழ்த்தும் எதிரிகள்

நூஹ் நபியைப் பார்த்துச் சொன்னார்கள்: மக்கள் மத்தியில் உமது சொல்லுக்கு என்ன மதிப்பு இருக்கிறது? ஏதோ ஒரு சில பேர்தான் உம்மைப் பின்பற்றுகிறார்கள். அவர்கள்கூட ஏழைகள், பலவீனமான வர்கள், சாமானியர்கள்! விபரம் தெரிந்தவர்கள் யாரும் உம்மைப் பின்பற்றவில்லையே!

அதற்கு நூஹ் நபி அளித்த பதில் அளித்தார்கள்: இவர்களெல்லாம் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டவர்கள். இவர்களின் உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாச்தான் நன்கு அறிந்தவன்!

பிறகு ஒரு கட்டத்தில் கீழிறங்கி வந்து நூஹ் நபியிடம் பேரம் பேஹத்தொடங்கினார்கள், அந்த நிராகரிப்பாளர்கள்:

நூஹே! நாங்கள் உம்மீது நம்பிக்கை கொள்ளவேண்டும்., உமது அறிவுரைகளைக் கேட்க வேண்டும் என விரும்புகிறீர், அப்படித்தானே! அதற்கு ஒரு நிபந்தனை. இதோ உம்மைச் சுற்றிலும் அமர்ந்திருக்கக் கூடிய இவர்களையெல்லாம் நீர் இங்கிருந்து விரட்டிட வேண்டும். இவர்கள் ஏழைகள். உதவாக்கரைகள்! எங்களோடு சரிசமமாக அமர்ந் திருக்கத் தகுதி இல்லாதவர்கள். இவர்களையும் எங்களோடு அமர வைத்துக் கொண்டு நீர் அறிவுரை வழங்கக்கூடாது!"

நூஹ் நபியவர்கள் அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். அந்த நிராகரிப்பாளர்களின் வார்த்தைகளில் ஆணவமும் தற்பெருமையும் கொட்டிக்கிடந்தது .....

பாஷா: எவ்வளவு ஆணவத்துடன் பேசியுள்ளார்கள்! இதற்கெல்லாம் நூஹ் நபி தக்க பதிலடி கொடுக்க வில்லையா? அல்லது அவர்கள் மீது நம்பிக்கைகொண்ட அந்த ஏழை எளிய மக்கள் சினம் கொண்டெழுந்து இந்தநிராகரிப்பாளர்களுக்குச் சரியான பாடம் கற்பிக்க வில்லையா?

சலீம்: அப்படியெல்லாம் பதிலடி கொடுப்பது நபிமார்களின் பண்பாடு அல்ல, பாஷா! மக்களிடையே சீர்திருத்தப் பணி செய்வதுதான் இலட்சியமே தவிர எவரையும் பழிதீர்த்துக்கொள்வது நோக்கம் அல்ல!

ஜைனப்: ஆமாம். பாஷா! கவனமாகக் கேள்! நபிமார்களின் அணுகு முறையை மேற்கொள்வதில்தான் நமக்கு எதிர்காலம் உள்ளது. இந்தக் கதையில் நாம் பெற வேண்டிய பாடம் இதுதான்1

சலீம்: ஆனாலும் நூச் நபியவர்கள் அந்த ஆணவக்காரர்களுக்கு பணிவாகத்தான் பதில் அளித்தார்கள்:

இதோ பாருங்கள்! இந்த ஏழை மக்களை என்னுடைய அவையில் இருந்து விரட்டப்போவதில்லை. ஏனெனில் இவர்கள் எனது அறிவுரை ஏற்று ஏக இறைவனாகிய அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள். இறைக்கட்டளைகளைப் பின் பற்றி வாழ்கிறார்கள். அந்த வகையில் இவர்கள் இறைவனின் விருந்தினர் ஆவார்கள்! என்னுடைய விருந்தினர் அல்லர்!

இவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கும் இறைநம்பிக்கையும் இறைமார்க்கமும் சுவனபதிக்குக்கொண்டு சேர்க்கக் கூடியதாகும். சுவனபதி என்பது எனது வீடு அல்ல., எனது விருப்பப்படி சிலரை சேர்த்துக்கொண்டு வேறு சிலரை அங்கிருந்து விரட்டுவதற்கு! சுவனம் அல்லாஹ்வுக்குச் சொந்தமானது. அவன் நாடுகிறவர்களை அங்கு அனுமதிக்கிறான்.

- இவ்வாறு நூஹ் நபிக்கும் நிராகரிப்பாளர்களுக்கும் ஏகத்துவக் கொள்கைப்போராட்டம் நீடித்தது, விவாதங்கள் தொடர்ந்தன.

## 6 - நீண்ட கால உழைப்பு

எதிரிகள் எடுத்துவைத்த ஆதாரங்கள் எல்லாம் வலுவிழந்து இனி சொல்வதற்கு எதுவும் அவர்களிடம் இல்லை என்றானது. அப்போதுதான் எதிரிகள், நூஹ் நபியிடம் மரியாதைக் குறைவாகப் பேச ஆரம்பித்தார்கள். அவர்களை ஏசவும் பேசவும் தொடங்கினார்கள், ஒருவகை வரட்டுத் துணிவுடன்!

குர்ஆன் இவ்வாறு குறிப்பிடுகிறது: நிராகரிப்பை மேற்கொண்டு அவருடைய சமூகப் பிரமுகர்கள் கூறினார்கள்: (நூஹே) உம்மை நாங்கள் பகிரங்கமான வழிகேட்டில் இருக்கக் காண்கிறோம்" (7 : 60)

ஆனால் அதற்கும்கூட நூச் நபியவர்கள், நபிமார்களுக்கே உரிய உயர்ந்த பண்பாட்டுடன்தான் பதில் அளித்தார்கள்:

என் சமுதாயத்து மக்களே! என்னிடம் எந்த வழிகேடும் இல்லை. நான் அகிலத்தாருடைய அதிபதியின் தூதனாக இருக்கிறேன். என் இறைவனின் தூதுச்செய்திகளைத்தான் உங்களுக்கு நான் எடுத்துரைக்கிறேன். உங்கள் நலன் நாடுபவனாகவும் இருக்கிறேன். மேலும் நீங்கள் அறியாதவற்றை யெல்லாம் அல்லாஹ்விடம் இருந்து நான் அறிகிறேன்" (7 : 62)

நூஹ் நபியவர்கள் தம் சமுதாய மக்களை ஊக்கத்துடனும் உறுதியுடனும் அல்லாஹ்வின் பக்கம் அழைத்தார்கள். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மணி நேரமும் அழைப்புப் பணியிலேயே கழிந்தன.

ஆண்டுகள் பல கடந்தன. நூச் நபியவர்கள் தொடர்ந்து இறைவழிபாட்டின் பக்கம் அழைத்துக் கொண்டே இருந்தார்கள். இரவு பகல் எந்நேரமும் அதே சிந்தனைதான். அதேபணிதான்! இரகசியமாகவும் பகிரங்கமாகவும் அறிவுரை கூறினார்கள். வேத வசனங்களை ஓதிக்காட்டி, உவமானங்கள் எடுத்துச் சொல்லி அல்லாஹ்வின் பேராற்றலை அனைவருக்கும் விளக்கினார்கள்.

அல்லாஹ்வை மட்டுமே வணங்கும்படி அறிவார்ந்த முறையில் - உள்ளம் உருகும்படி எடுத்துரைத்தார்கள். அல்லாச் மீது நம்பிக்கை கொள்ளுங்கள்., அவன் உங்களை மன்னிப்பான் என்று அன்போடு அழைத்தார்கள். எந்தப் பிரதி பலனும் எதிர்பாராது உழைத்தார்கள்!

அம்மக்களோ, நூஹ் நபியர்கள் இவ்வாறெல்லாம் சொன்ன பொழுது விரல்களால் காதுகளை அடைத்துக் கொண்டு ஓடினார்கள்! அந்த அளவுக்கு அவர்களின் இதயங்கள் குருடாகியிருந்தன!

அழைப்புப் பணியின் கணக்கில் ஆண்டுகள் மூன்று இலக்கத்தை எட்டிப்பிடிக்க, இறைநம்பிக்கை கொண் டோரின் எண்ணிக்கை ஒற்றை இலக்கத்திலேயே இருந்தது.

ஆம்! இவ்வுலகில் நூஹ் நபியவர்கள் 950 ஆண்டுகள் வாழ்ந்து அழைப்புப் பணி ஆற்றினார்கள். ஆனாலும் அதனை ஏற்று நேர்வழி பெற்றோர் குறைவாகவே இருந்தனர்!

கமால்: என்ன 950 ஆண்டுகளாக இவ்வுலகத்தில் வாழ்ந்தார்கள், நூஹ் நபியவர்கள்? ஆச்சரியமாக இருக்கிறதே!

சலீம்: ஆம்! வெள்ளப் பிரளயத்திற்கு முன்பு எல்லா மக்களும் அவ்வாறு நீண்ட ஆயுளைப் பெற்றிருக்கலாம். அல்லது நூஹ் நபி மட்டும் இவ்வளவு நீண்ட காலம் வாழ்ந்திருக்கலாம். அது அவர்களுக்கு வழங்கப்பட்ட ஓர் அற்புதமாக இருக்கலாம்!

ஆமினாவும் ஃபாத்திமாவும்: அப்பா, 950 ஆண்டுகள் அழைப்புப் பணி செய்தும் யாரும் திருந்தவில்லை என்கிறீர்களே நூஹ் நபிக்குக் கோபம் வரவில்லையா?

சலீம்: கோபம்கொள்ள என்ன இருக்கிறது? அவர்கள் நிறை வேற்றியது இறைவனின் கட்டளையை! அவன் எல்லா வற்றையும் பார்த்துக்கொண்டுதானே இருக்கிறான்.

## 7 – நீரின்றி செல்லுமோ கப்பல்?

இவ்வளவு நீண்ட நெடிய காலம் உழைத்து அழைப்புப் பணி ஆற்றியும் மக்களின் உள்ளம் இளக வில்லை என்பதைக்கண்ட நூஹ் நபி மனம் நொந்தார்கள்தான். ஆனாலும் ஊக்கம் குன்றிடவில்லை! கவலைப்பட்டு கவலைப்பட்டே அவர்களின் இதயம் கனத்தது. ஆனாலும் அவர்கள் இறைவன் மீதான நல்லாதரவை கைவிட்டு விடவில்லை!

ஒரு நாள் அல்லாஹ்விடம் இருந்து ஓர் அறிவிப்பு வந்தது. நூஹே! இப்பொழுது நம்பிக்கை கொண்ட வர்களைத் தவிர இனி யாரும் நம்பிக்கை கொள்ளப் போவதில்லை.

அப்பொழுதுதான் நூஹ் நபியவர்கள் அந்த நிராகரிப்பாளர்களைத் தண்டிக்க வேண்டுமென அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தார்கள்.

அல்லாஹ்வும் தன் நபியின் இறைஞ்சுதலுக்குப் பதில் அளித்தான். ஆம், ஒரு பிரமாண்டமான கப்பல் செய்யுமாறு நூஹ் நபிக்குக் கட்டளை பிறப்பித்தான்!

கப்பல் கட்டுவதற்குப் பயன்படும் வகையில் பெரிய பெரிய மரங்களை வளர்க்குமாறு அல்லாஹ் கூறினான். நூச் நபியும் அவ்வாறே மரங்கள் நட்டார்கள். அவை வளர்வதற்குப் பல்லாண்டுகள் பிடித்தன.

எதிர்பார்த்தவாறு மரங்கள் வளர்ந்து வந்தபொழுது அவற்றைப் பாளங்களாக அறுத்துக் கப்பல் செய்தார் கள். அதற்கும் பல்லாண்டுகள் பிடித்தன. மிகப்பிரமாண்டமாக கப்பல் தயாரானது! அது மூன்று தளங்கள் கொண்டதாக இருந்தது. முதல்தளம் விலங்களுக்கு. இரண்டாவது தளம் மனிதர்களுக்கு. மூன்றாவது தளம் பறவைகளுக்கு. இவ்வாறு அல்லாச்வின் வழிகாட்டலின்படி மிகப் பிரமாண்டமானதொரு கப்பலை நூஹ் நபியவர்கள் கட்டிமுடித்தார்கள்.

கப்பலைத் தயார் செய்துகொண்டிருக்கும்பொழுது அந்த வழியாக நிராகரிப்பாளர்கள் செல்வார்கள். கப்பல் செய்வதில் மும்முரமாக நூஹ் நபி ஈடுபட்டிருப்பதைக் கண்டு பரிகாசம் செய்வார்கள்.

நீண்ட காலமாக மழை தண்ணீர் இல்லாமல் பூமி வரண்டு கிடந்தது. அருகில் நதியோ கடலோ எதுவு மில்லை. நிராகரிப்பாளர்கள் பரிகாசத்துடன் கேட்டார்கள்: என்ன நூஹே! கப்பலைத் தரையிலா செலுத்தப் போகிறீர்? கடல்எங்கே இருக்கிறது., கப்பல் ஓட்டுவதற்கு?”

-இவ்வாறு ஏளனமாகக் கேட்டுச் சிரித்துக்கொண்டு ஒருவருக்கு மேல் ஒருவர் விழுவார்கள். நூஹின் பைத்தியக் காரத்தனம் இப்பொழுது முற்றிப் போவிட்டதோ” என்று பரிகாசமாகப் பேஷினார்கள்!

இவ்வுலகின் புறத்தோற்றத்தைக் கண்டு மனிதன் எந்த அளவுக்கு ஏமாந்துபோகிறான், பாருங்கள். கண்ணெதிரில் காட்சி தருபவைதான் ஏற்றுக்கொள்வோம். அதற்கு மேல் எதுவும் இல்லை என்றுதான் மனிதன் கருதுகிறான்! அதனால் இன்னும் சில நாட்களுக்குப் பின்பு இதே இடத்தில் உண்மையிலேயே நூஹ் நபி கப்பல் விடப்போகிறார்கள் என்பது பற்றி அந்த மக்களில் யாரும் சிந்திக்கவில்லை!

பெரும் சோதனை ஒன்று அவர்களுக்குக் காத்திருக்கிறது., அது பற்றி நூஹ் நபி எச்சரிக்கையும் செய்து விட்டார்கள். அதிலிருந்து தப்பிப்பதற்காக ஆயத்தங்களையும் செய்து கொண்டிருக்கிறார்கள்! இத்தனைக்குப்

பிறகும் அந்த மக்கள் அலட்சியத்தில்தான் மூழ்கி இருந்தார்கள்! அவர்களின் மதியீனம் குறித்தும் அசூட்டுத் தைரியம் குறித்தும் உண்மையில் நூஹ் நபியவர்களுக்குச் சிரிப்புதான் வந்தது!

எவ்வளவு பெரிய பைத்தியக்காரர்கள் இம்மக்கள்! இந்நிலையில் நம்மைப் பைத்தியக்காரன் என்கிறார்களே என்று மன வேதனை அடைந்தார்கள் நூஹ் நபியவர்கள்!

## 8 - வெள்ளப் பிரளயம்

கப்பல் செய்து முடிந்தது. நூஹ் நபியின் வீட்டிலிருந்த உலை அடுப்பில் இருந்து நீர் பொங்கிப் பீரிட்டது. அதுவே வெள்ளப் பிரளயத்தின் அடையாளம்.

நூஹ் நபியவர்கள் எல்லா உயிரினங்களில் இருந்தும் ஒரு ஜோடியை - அதாவது ஒவ்வொரு விலங்கு களில் இருந்தும் தலா ஒரு ஜோடியைப் கப்பலில் ஏற்றினார்கள். இதேபோன்றே ஒவ்வொரு பறவைகளின் ஜோடியை யும் ஏற்றினார்கள். கப்பல் செய்யும்பொழுதே பெரிய பெரிய கூண்டுகளையும் தயாரித்திருந்தார்கள்.

இவ்வாறு எல்லா உயிரினங்களையும் ஏற்றிய பிறகு நூஹ் நபியும் அவர்களின் குடும்பத்தினரும் கப்பலில் ஏறினார்கள். அவர்களுடைய குடும்பத்தினர் என்றால் எல்லோரும் அல்ல., இறைநம்பிக்கை கொண்டவர்கள் யார் யாரோ அவர்களுக்கு மட்டும்தான் அனுமதி. நூஹ் நபியின் மனைவியும் மகனும் - நூஹ் நபி மீது நம்பிக்கை கொள்ளாததால் கப்பலில் ஏற்றப்படவில்லை. இறைநம்பிக்கையாளர்கள் மட்டும் கப்பலில் ஏற்றப்பட்டனர். அவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாகவே இருந்தது.

ஜைனப் : அவர்களுடைய மனைவிக்கு என்ன நேர்ந்தது? அவளும்கூடவா நம்பிக்கை கொள்ளவில்லை?

சலீம் : அதனால்தான் அவ்விருவரும் தண்டனைக்கு ஆளானார்கள். நூஹ் நபியின் மனைவி இறை நம்பிக்கை கொள்ளவில்லை என்பது மட்டுமல்ல,, நூஹ் நபிக்குத் துரோகம் செய்தாள். மறைமுகமாக நிரா கரிப்பாளர்களுக்கு ஆதரவாக இருந்தாள்.

பாஷா: நிராகரிப்பாளர்களுக்கு ஆதரவாக என்றால் எப்படி?கொஞ்சம் புரியும் படியாகச் சொல்லுங்களேன்.

சலீம்: அதாவது, நூஹ் நபியைப் பற்றி அவர்களின் எதிரிகளிடத்தில் அவதூறாகப் பேசுவாள். இந்தக் கிழடன் இப்படித்தான் ஓயாமல் உழறிக்கொண்டிருக்கிறார்! - அல்லாஹு அக்பர் -இறைவனே பெரியவன், ஒரே இறைவனை மட்டுமே வணங்க வேண்டும் என்று என்னவெல்லாமோ புதுசு புதுசாகக் கூறிக் கொண்டிருக்கிறார்! நீங்கள் இதனைக் காதில் போட்டுக் கொள்ளாதீர்கள் என்று கோள் சொல்லுவாள்! நபியின் மனைவியே தம் கணவரின் பிரச்சாரத்திற்கு எதிராகப் பேசினால் பிறகு யார்தான் நம்பிக்கைகொண்டு நேர்வழி திரும்புவார்கள்!

இவ்வாறு நூஹ் நபியின் மனைவிக்கும் கப்பலில் இடம் அளிக்கப் படாமல் இறைவனின் கோபத்திற்கும் தண்டனைக்கும் ஆளாக்கப்பட்டாள்!

இறைநம்பிக்கையாளர்களை நோக்கி நூஹ் நபி கூறினார்கள்: இந்தக் கப்பலில் ஏறிக்கொள்ளுங்கள். அல்லாஹ்வின் திருப்பெயர்கொண்டே இது செல்வதும் நிலைகொள்வதும் உள்ளது. திண்ணமாக என் அதிபதி பெரிதும் மன்னிப்பவனாகவும் கருணை பொழிபவாகவும் இருக்கி றான்" (11 : 41)

பூமியில் எங்கு எங்கு குழிகள் - பள்ளங்கள் இருந்தனவோ அவை எல்லாவற்றில் இருந்தும் தண்ணீர் பொங்கியது., பீறிட்டுக் கிளம்பியது! அதுவே பிரளயத்தின் ஆரம்ப அடையாளம்!

பிறகு வானத்தில் இருந்தும் அடைமழை கொட்டோ கொட்டென்று கொட்டியது. அப்படிப்பட்டதொரு மழையை அதற்கு முன்னரும் பூமி பார்த்ததில்லை., அதற்குப் பின்னரும் பார்த்ததில்லை!

இவ்வாறு பெருவாரியான மழை வானத்திலிருந்தும் கொட்ட, பூமியும் தண்ணீரை வெளியே தள்ளவே நீர் மட்டம் ஒவ்வொரு மணி நேரமும் அதிகரித்துக்கொண்டிருந்தது. மக்கள் பதறித்துடித்து செய்வ தறியாது அங்கும் இங்கும் ஓடினார்கள்!

சற்றுத் தொலைவில் நூஹ் நபியின் மகன் நின்று கொண்டிருந்தான். அவன் இறைநம்பிக்கை கொள்ளாமல் நிராகரிப்பாளர்களின் கூட்டத்தில் சேர்ந்திருந்தான். அவனைக் கண்டதும் நூஹ் நபியர்கள் அவனை அன்போடு அழைத்தார்கள். அதனை குர்அன் இவ்வாறு கூறுகிறது:

ஓ மகனே! எங்களுடன் கப்பலில் ஏறிக்கொள். நராகரிப்பாளர்களில் ஒருவனாக நீ ஆகிவிடாதே!" (11 :42)

பாஷா: கப்பலில் ஏறுவதற்கு நிராகரிப்பாளர்களுக்கு அனுமதி இல்லை என்றீர்கள். பிறகு கப்பலில் ஏறுமாறு தம் மகனை எப்படி நூஹ் நபி அழைத்தார்கள்?

சலீம்: இறைநம்பிக்கை கொள்ளுமாறுதான் தம் மகனை நூஹ் நபியவர்கள் அழைத்தார்கள். நீ இப்பொழுதும் பிடிவாதமாக இருக்காதே! இறைவனின் தண்டனை நெருங்கி வந்து விட்டது, பார்! எனவே எனது அழைப்பை ஏற்றுக்கொள்! இறைநம்பிக்கைகொள். கப்பலில் ஏறிக்கொள், கரை சேர்ந்து விடலாம் என்றுதான் தம் மகனிடம் சொன்னார்கள் நூஹ் நபியர்கள்!

ஜைனப்: சரி அப்பொழுதாவது இறைநம்பிக்கை கொண்டு கப்பலில் ஏறினானா? இல்லையா?

சலீம்: அதுதான் நடக்கவில்லை! அவன் சொன்ன பதிலை குர்ஆனே குறிப்பிடுவதைப் பாருங்கள்: நான் இப்பொழுதே மலை மீது ஏறிக்கொள்கிறேன். அது என்னை வெள்ளத்தில் இருந்து காப்பாற்றி விடும்" (11:43)

அதற்கு நூஹ் நபி சொன்னார்கள்: இன்று அல்லாஹ்வின் தீர்ப்பில் இருந்து காப்பாற்றக்கூடியது எதுவுமில்லை., ஆனால் அல்லாஹ் யாருக்கு கருணை புரிந்தானோ அவர்கள் மட்டும் காப்பாற்றப்படுவார்கள்!" (11 : 43) - அதற்குள் பெரும் அலை வந்து குறுக்கிட்டு அவ்விருவரையும் பிரித்து விட்டது. மகன் தண்ணீரில் மூழ்கி அழிந்தான்.

வெள்ளப் பிரளயத்தின் கோபம் அதிகமானது. மக்களின் தலைக்கு மேல் உயர்ந்த வெள்ளம் மேலும் மேலும் உயர்ந்து கொண்டே சென்றது. பிறகு மலை உச்சிக்கும் மேலே எழுந்து பேரலைகள் ஆர்ப்பரித்தன! பூமியின் மேற்பரப்பையே மூடியது! எங்கு நோக்கினாலும் வெள்ளம் பெறுக்கெடுத்துக் கடல் அலைகள் போல் காட்சியளித்தது!

ஃபாத்திமாவும் ஆமினாவும்: கேட்பதற்கே பயமாக இருக்கிறதே, அப்பா! அதன் பிறகு என்ன ஆனது?

சலீம்: இறைநம்பிக்கையாளர்களுக்கு எந்த ஆபத்தும் இல்லை. அவர்கள்தான் கப்பலில் ஏறிக் கொண்டார்களே! எந்நேரமும் தொழுது கொண்டும் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்திக்கொண்டும் துதிபாடிக் கொண்டும் இருந்தார்கள்.

அந்தப் பேய் வெள்ளத்தில் சிக்கிய எல்லா உயிரினங்களும் பரிதாபமாக அழிந்தன. மனிதர்கள், மிருகங்கள், பறவைகள் என்று எந்த ஓர்உயிரின மும் உயிருடன் இல்லை! கப்பலில் நூஹ் நபியுடன் ஏற்றப்பட்டிருந்த இறைநம்பிக்கையாளர்களும் ஏனைய உயிரினங்களும் மட்டும்தான் காப் பாற்றப்பட்டார்கள்!

அப்படிப்பட்டதொரு வெள்ளப் பிரளயத்தை இன்று சிந்தித்துப் பார்க்கவே முடியாது! நமது கற்பனைக்குள் வராது. அவ்வளவு கடுமையான, கொடுமையானதொரு நிகழ்ச்சியாகும் அது! படைத்த இறைவனின் பேராற்றலை நிரூபிக்கக்கூடிய பிரமாண்டமான சான்றுகளுள் ஒன்றாகும். எவ்வளவு காலம் நீடித்தது என்பதை யாரும் சொல்ல முடியாது.

நூச் நபியின் கப்பல் மலைகளைப் போல் எழுந்து ஆற்பறித்துக் கொண்டிருந்த பேரலைகளுக்கு மத்தியில் தத்தளித்துக் கொண்டு சென்று கொண்டிருந்தது.

ஒருவாறாக இறைவனின் கட்டளை வந்தது, வானத்திற்குக் கூறினான்: அழுகையைக் கொஞ்சம் நிறுத்திக் கொள் என்று! இதே போல் பூமிக்கும் கட்டளையிட்டான்: எல்லாத் தண்ணீர்ரையும் விழுங்கிவிடு என்று!

ஜூ தி மலை மீது நீ நிலைகொள் என்று கப்பலுக்கும் கட்டளை பிறப்பித்தான் இறைவன்! ஆம்! வெள்ளம் படிப்படியாக வற்றவே கப்பல் ஜூ தி மலை மீது மோதிக்கொண்டு நின்றது.

பாஷா: இப்பொழுதும் அந்த மலை உள்ளதா? உள்ளனெில் எங்கு உள்ளது?

சலீம்: ஆம், குர்திஸ்தான் நாட்டில் இப்னு உமர் எனும் பெயருடைய தீவுப்பகுதியில் அந்த மலை உள்ளது. இன்றும்கூட ஜூ த் எனும் பெயரில்தான் மக்கள் அதனை அழைக்கிறார்கள்.

கப்பல் நின்றதும் நூச் நபியவர்கள் என்ன செஷ்ய்தார்கள் தெரியுமா? ஒரு புறாவை வெளியே பறக்க விட்டு பரிசோதித்துப் பார்த் தார்கள். அது ஒலிவச்செடியின் குச்சியை அலகில் எடுத்துக்கொண்டு திரும்பி வந்தது. அதனைக் கண்ட போதுதான் எல்லோருக்கும் நிம்மிதி! தண்ணீர் முழுவதுமாக வற்றி விட்டது என்பது உறுதியானது!

## 9 - மகன் மீது பாசம்!

அமளி துமளிகள் எல்லாம் முடிந்து அமைதி நிலவியது! தம் மகனும் கப்பலில் ஏறி இருந்தால் தப்பித்திருப்பானே. இந்தப் பேய் வெள்ளத்தில் மூழ்கி மாண்டுவிட்டானே என்று மகனின் மீது தந்தைக்குப் பரிதாபம் ஏற்பட்டது. ஆம், நூஹ் நபியவர்கள் மிகவும் கவலையுடன் இருந்தார்கள். மகனின் பாசம் அவர்களை விட்டும் நீங்கவில்லை.

நூச் நபியவர்கள் அல்லாஹ்விடம் இறைஞ்சுஷினார்கள்: என் இறைவனே! என்னுடைய மகன் என் குடும்பத் தைச் சேஷர்ந்தவன்தானே! (என் குடும்பத்தினரைக் காப்பாற்றுவதாக) நீ அளித்த வாக்குறுதி உண்மை யானதாகும். தீர்ப்பு வழங்குவோரில் எல்லாம் நீ உயர்ந்தவனும் சிறந்தவனுமாாவாய் (11 : 45)

அதாவது, நூஹ் நபியவர்கள் தம்முடைய மகன் தமது குடும்பத்தைச் சேர்ந்தவன் என்று அல்லாச்வுக்கு எடுத்துச் சொல்ல நாடினார்கள். அவர்களுடைய குடும்பத்தார்களைக் காப்பாற்றுவதாக அவர்களுக்கு அல்லாச் வாக்களித்திருந்தான். ஆனால் அவர்களுடைய மகன் வெள்ளத்தில் மூழ்கி இறந்து விட்டானே என்று மனம் வருந்தி பிரார்த்தனை செய்தார்கள்.

அதற்கு அல்லாச் பதில் அளித்தான்: ஓ நூஹே! நிச்சயமாக அவன் உமது குடும்பத்தைச் சேர்ந்தவன் அல்லன். அது ஒரு வீணான செயல் ஆவான் எதனுடைய உண்மை நிலையை நீர் அறிய மாட்டீரோ அதனைப் பற்றி என்னிடம் கேட்காதீர். அறிவிலிகளில் நீரும் ஒருவராகிவிட வேண்டாம் என்று உமக்கு நான் அறிவுறுத் துகிறேன். அல் குர்ஆன் (11 : 46)

அதாவது, நபியின் மகன், நபியின் குடும்பத்தைச் சேர்ந்தவன் அல்லன் என்பதை உணர்த்தினான் அல்லாச். ஏனெனில் அவன் இறைநம்பிக்கை கொள்ளவில்லை. இறை மார்க்கத்தைப் பொறுத்த வரையில் மக்களை இணைக்கும் பாலம் எது தெரியுமா? இறைநம்பிக்கைதான். இரத்த பந்தம் அல்ல. யார் அல்லாஹ்வையும் நபியையும் பின்பற்றி வாழ்கிறார்களோ அவர்தான் நபியின் குடும்பத்தைக்ஷ் சேஷர்ந்தவன்!

சரியாகச் சொல்வதானால் இறைநம்பிக்கையாளர்தான் உண்மையான மகன்! அவருடைய மனைவியின் மூலமாக அவருக்குப் பிறந்தவர் - நிராகரிப்பாளனாக இருந்தால் அவருடைய குடும்பத்தைச் சேர்ந்தவனாக முடியாது. இந்த அடிப்படையை நூஹ் நபி புரியாத காரணத்தால்தான் அவர்களை அல்லாஹ் கண்டித்தான்!

பாசா: கெஷாந்த மகனை எப்படி மகன் இல்லை என்று சொல்ல முடியும்? அது உண்மை அல்லவே!

சலீம்: மகன் இல்லை என்று சொல்லவில்லையே. அவன் உமது வழிகாட்டலை ஏற்காத காரணத்தால் அவன் உமது குடும்பத்தைச் சேர்ந்தவனாக முடியாது என்றுதான் கெஷால்லப்பட்டுள்ளது. இதனை ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இன்னும் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம்.

ஒருமனிதனின் உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு அழுகிப்போய் விட்டது என்று வைத்துக்கொள். மருத்துவர் என்ன செய்வார்?இப்பொழுது இதனை அறுவைச் சிகிச்சை மூலம் அகற்ற வேண்டும் என்றுதான் தீர்மானிப்பார். நோயாளியோ இது என் உடலின் உறுப்பு., இதனை அகற்றக்கூடாது என்று மறுக்கவே அதற்கு ஆறுதல் கூறும் வகையில் மருத்துவர் சொல்கிறார்: இது உங்கள் உடலின் உறுப்பு அல்ல., இது முற்றிலும் அழுகிப் போய் விட்டது. இதனை அறுவைக்ஷ் கூஷிகிக்ஷ்சைஷ மூலம் அகற்றினால்தான் நீ உயிர் பிழைக்க முடியும்! - இந்தக் கதையில் வரும் தந்தை - மகனின் நிலை முற்றிலும் இதுபோலவே இருந்தது!

கமால்: அது சரி, நபியின் மகனைக் குறித்து ஒரு வீணான செயல் என்று சொல்லப்பட்டதன் கருத்து என்ன?

சலீம்: அதாவது, இவனை வளர்ப்பதற்காக நீர் மேற்கொண்ட முயற்சியெல்லாம் வீணாகிவிட்டது, அந்தப்பணி சீர்குலைந்து விட்டது என்பதாகும்.

## 10 - இறுதி அறிவுரை

நூஹ் நபியவர்கள் அல்லாச்விடம் பாவமன்னிப்புக் கோரி அவன் பக்கம் மீண்டார்கள். அவர்களுக்கு அல்லாஹ் மன்னிப்பு வழங்கி கருணை புரிந்தான். கப்பலில் இருந்து இறங்குமாகு கட்டளையிட்டான்.

நூஹ் நபி கப்பலை விட்டும் கீழே இறங்கினார்கள். பறவைகளையும் விலங்குகளையும் அவிழ்த்துவிட்ட பிறகு பூமியில் நெற்றியை வைத்து ஸு ஜூ தில் விழுந்து அல்லாஹ்வை வணங்கினார்கள்.

வெள்ளம் முழுவதும் வற்றிய பின்னரும் பூமி எங்கும் ஒரே ஹேறும் ஹகதியுமாகவே இருந்தது. நூச் நபியவர்கள் தொழுது முடித்த பிறகு பிரமாண்டமான வழிபாட்டுத் தலம் ஒன்றை கட்டி முடிக்கத் தீர்மானித்து அதற்காகப் பூமியில் அடித்தளம் அமைக்கும் பணியில் இருந்தார்கள்.

மக்கள் எல்லோரும் நெருப்பு மூட்டி அதன் சுற்றிலும் அமர்ந்து குளிர்காய்ந்தார்கள். முன்னர் கப்பலில் நெருப்பு மூட்டுவது தடுக்கப்பட்டிருந்தது., ஏனெனில் கப்பல் தீப்பற்றி விடக்கூடாது என்பதற்காக. அதனால் கப்பலில் இருந்த நாட்களில் யாருமே சூடான உணவை உட்கொள்ளவில்லை. இப்பொழுது இயல்பு வாழ்வு திரும்பிதும் அடுப்புகளைப் பற்றவைத்து இறைச்சிகளைப் பொறித்து எல்லோரும் உண்டு மகிழ்ந்தார்கள்.

வெள்ளத்தின் பீதி மாறியதால் மக்களின் முகங்களில் மகிழ்ச்சி அலை மோதியது. இயற்கையான உரையாடல்கள் தொடங்கின. சந்தோசமாகப் பேஹிக்கொண்டிருந்தார்கள்.

கப்பலில் இருந்தபொழுது யாரும் யாருடனும் பேஹாலம் மௌனமாகவே இருந்தார்கள். என்ன நடக்குமோ என்ற பீதி அனைவரையும் பிடித்தாட்டியது. எங்கும் வியாபித்திருந்த வெள்ளப்பிரளயத்தால் திகில் அடைந்திருந் தார்கள். அல்லாஹ்வின் மகத்துவமும் மாண்பும் அவர்களின் உள்ளங்களில் நிறைந்திருந்தன. அதுவே அவர்களை உள்ளத்தளவில் சிறை வைத்திருந்தன!

ஆண்டுகள் பல கடந்தன. நூஹ் நபியவர்கள் தமக்கு மரண நேரம் நெருங்கிவருவதை உணர்ந்தார்கள். தம் மக்கள் அனைவரையும் அருகில் அமர்த்தி ஓர் உண்மையை எடுத்துரைத்து விட்டு இவ்வுலகைவிட்டும் விடை பெற்றார்கள் :

ஏக இறைவனாகிய அல்லாஹ்வை நீங்கள் என்றைக்கும் மறந்து விடக்கூடாது. நீங்கள் அனைவரும் அவன் ஒருவனை மட்டுமே வணங்கி வர வேண்டும்!

## 11 - படிப்பினைகள்!

ஜைனப் : இந்தக் கதையில் இருந்து நாம் பெறும் படிப்பினைகள் யாவை என்பதையும் கூறுங்கள்.

சலீம்: இறைநம்பிக்கை கொண்ட அனைவரையும் நம்முடைய சகோதரர்களாகவே நாம் கருத வேண்டும். யாரையும் இழிவாகக் கருதக் கூடாது.

நாம் இறைவனுக்கு அஞ்சி வாழாமல் தீமைகள் புரிந்தால், பாவங்களில் மூழ்கிக் கிடந்தால் நாளை மறுமையில் இறைவனின் தண்டனையில் இருந்து தப்பிக்க முடியாது. நூஹ் நபியின் மனைவி மற்றும் மகனின் நிலையைக் கவனித்தீர்களா? ஒரு நபியாலேயே அவர்களுக்கு எந்த உதவியும் செய்ய முடியாமல் போனது. அவ்விரு வரும் இறைவனின் தண்டனைக்கே ஆளானார்கள்.

எந்த ஒரு காரியமானாலும் பிஸ்மில்லாஹ் என்று கூறித் தொடங்கினால் அதன் மகத்துவமே தனிதான். இங்கு நூஹ் நபியவர்கள் - தாமும் இறைநம்பிக்கையாளர்கள் அனைவரையும் கப்பலில் ஏற்றிய பின்னர் பிஸ்மில்லாஹ் (அல்லாஹ்வின் திருப்பெயரால்) என்று கூறித்தான் பயணத்தைத் தொடங்கினார்கள்! அனைவரும் பாதுகாப்பாய் கரை சேர்ந்தார்கள்! இதுபோன்று நாமும் எந்தஹ் ஹெயலைகூஷ் கெஷய்தா லும் பிஸ்மில்லாச் கூறுவதை மறந்திடக் கூடாது!

இதுபோன்ற வரலாறுகளில் இருந்தும் நம் கண்ணெதிரே நடை பெறும் நிகழ்ச்சிகளில் இருந்தும் நாம் தக்க படிப்பினை பெற்றிட வேண்டும்.

கமால்: எல்லாம் சரிதான் அப்பா, நூஹ் நபியவர்கள் ஏன் அந்த மக்களைத் தண்டிக்க வேண்டுமென அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தார்கள்? பின்னொரு காலத்தில் அவர்கள் திருந்தலாம்தானே?

சலீம்: பின்னொரு காலத்தில் என்றால் எப்பொழுது? இவ்வளவு நீண்டி நெடிய காலமாக - சுமார் 1000 ஆண்டுகளாக அந்த மக்களுக்கு மத்தியில் நூஹ் நபியவர்கள் அழைப்புப் பணி செய்திருக்கிறார்கள்., அதிலே திருந்த வில்லையானால் இனி எப்பொழுது திருந்தப் போகிறார்கள்!

குர்ஆனில் 71 வது அத்தியாயத்தில் நூஹ் நபியவர்கள், அம்மக்களைத் திருத்துவதற்காக எப்படி எப்படியெல்லாம் முயற்சி செய் தார்கள் என்பது பற்றி இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது:

நூஹ் நபி பணிந்து கூறினார்: என் இரட்சகனே! நான் என் சமுதாயத்தினருக்கு இரவு பகலாக அழைப்பு விடுத்தேன் .... மீண்டும் நான் அவர்களை உரக்கக் கூவி அழைத்தேன். பின் வெளிப்படையாகவும் அவர் களுக்கு எடுத்துரைத்தேன். அந்தரங்கமாகவும் விளக்கினேன் ...! மேலும் நூஹ் நபியவர்கள் கூஷத்தித்த கச்டங்கள், அந்த மக்களிடம் குடிகொண்டிருந்த பிடிவாதங்கள், மூர்க்கத்தனங்கள் எல்லாம் அந்த அத்தி யாயத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன!

என்ன நடந்துள்ளது என்பதைப் பார்த்தீர்களா? இவ்வளவுக்குப் பிறகும் அந்த மக்கள் திருந்தாத பொழுதுதான் அவர்களுக்குத் தக்க தண்டனை கொடுக்குமாறு அல்லாச்விடம் பரிந்துரைத்தார்கள் நூச் நபியவர்கள்!

பிள்ளைகளே! நாமும் இவ்வாறு தொடர்ந்து இஸ்லாமிய அழைப் பினை மக்களுக்கு விடுத்துக்கொண்டே இருக்க வேண்டும். இறைவனையும் இறைத்தூதர்களையும் ஏற்றுக்கொள்ளுமாறும் அவர்களின் கட்டளை களுக்குக் கீழ்ப்படிந்து வாழுமாறும் மக்களுக்கு வழிகாட்டிக் கொண்டே இருக்க வேண்டும்.

அதற்கான கூலியை அல்லாச்விடம் எதிர்பார்த்துத் தொடர்ந்து இப்பணிகளை ஆற்றிட வேண்டும்!